உ

# சிவ பராக்ரம போற்றி

## அகவல்

[ த்ரிசதி - 300 போற்றி ]



ஆக்கியோன்
தணிகைமணி-ராவ்பகதூர்
வ. சு. செங்கல்வராய பிள்ளை, எம்.ஏ.

79/1



திருச்சிற்றம்பலம்

சிவலிங்கங்களைக் கூறி, வடமொழித் த்ரிசதி போல முந்நூறு முறை 'போற்றி' எனக் கூறிச் சிவபிரானை வணங்க வேண்டும் என்கின்ற ஆசை கொண்டு இந்நூல் ஆக்கப்பட்டது.

இந்நூலை இனுமாகத் தமது 'ஜோதி' அச்சகத்தில் அழகாக அச் சேற்றிக் கொடுத்த அருந்தவச் செல்வரும், முருக பக்தியில் முன் அணியில் நின்று அப்பெருமானது திருவருட் பேற்றில் திளைத்து மகிழ்பவருமான திருவாளர் ராஜாபாதர் அவர்களுக்கும், இந் நூலின் வெளியீட்டுக்கு வேண்டிய பிற முயற்சிகளை மேற் கொண்ட நண்பர் சிவநேசச்செல்வர் திருப்புகழ்க் கடலில் திளைத்து விளையாடும் பக்தியாளர் திருவாளர். கா. ரா. முருகேசப் பிள்ளையவர்களுக்கும் எனது பெருநன்றி உரித்தாகும். திருத்தணிகை யெம்பெருமான் திருவருள் இவர்கள் இருவரிடமும் தழைத்தோங்க வேண்டி அப்பெருமானை முப்போதும் வணங்குகின்றேன்.

292, லிங்கசெட்டித் தெரு, சென்னை-1<br>
11—11—1955

வ. சு. செங்கல்வராய பிள்ளை.

உ

கணபதி துணை

திருத்தணிகேசன் துணை

# சிவபராக்ரம போற்றி அகவல்

திருச்சிற்றம்பலம்

1. *அட்டவீரம்:

அயன் தலை அறுத்த ஆதி போற்றி
அந்தகற் செற்ற அரசே போற்றி
திரிபுரம் எரித்த சேவக போற்றி
தக்கன் வேள்வி தகர்த்தாய் போற்றி
சலந்தரன் வலந்தனைச் சாய்த்தனை போற்றி

---

* அட்டவீரத்தலங்கள் முறையே கண்டியூர், திருக்கோவலூர், திரு அதிகை, திருப்பறியலூர், திருவிற்குடி, வழுவூர், குறுக்கை திருக்கடவூர்.

களிறு பிளிறக் கண்டனே போற்றி
காமனை எரித்த கண்ணுதல் போற்றி
காலனை உதைத்த கடவுள் போற்றி

2. பிறவீரம் :

சேற்கண் இடந்த சேவக போற்றி
ஆமையோ டணிந்த அண்ணலே போற்றி
ஏனத் தெயிறுபூண் எந்தாய் போற்றி
சிங்க வுரிபுனை சேவக போற்றி
வாமனற் செற்ற வரத போற்றி
குரண்டா சுரனைக் குலைத்தனே போற்றி
காளியை அடக்கிய கர்த்தனே போற்றி
கரமிரு பத்தாற் கயிலையை அசைத்த
இலங்கை மன்னன் இருபது தோளிறக்
கலங்க ஊன்றலும் நலங்கெழு சிந்தையன்

கீதம் பாடக் கிருபைபா லித்து
நாளொடு வாள்தரு நாத போற்றி

3. தக்கன் யாகம்:

எச்சனை வீட்டிய என்பொனே போற்றி
இந்திரன் தோள்முறி எந்தாய் போற்றி
சூரியன் கண்பல் தொலைத்தனை போற்றி
குயில்சிற கரிந்த கொற்றவ போற்றி
திங்களைக் காற்கீழ்த் தேய்த்தனை போற்றி
கருடன் சிறகைக் கழித்தனை போற்றி
நாமகள் நாசி கொய்தனை போற்றி
அங்கியின் கரத்தை அட்டனை போற்றி

4. தாருகாவனம்:

அரவணி பூண்டஎன் அன்பே போற்றி
மான்மழு ஏந்திய வானவ போற்றி

அனலெரி ஏந்துகை அத்தா போற்றி
பூதர் வெண்டலை துடியெனப் புக்கவை
ஆற்றல் அடங்க அடக்கினை போற்றி
முயலகன் உரமிதி மொய்ம்பா போற்றி
30 புலித்தோல் அரைக்கணி பூசுர போற்றி

5. பிற பெருமைகள்-அருட்டிறங்கள் :

இருவர்க் கரியனாய் இருந்தாய் போற்றி
கங்கை சூடிய கடவுள் போற்றி
பிறையணி சடையெம் பெருமான் போற்றி
விடமணி கண்டநின் மெய்யடி போற்றி
கல்லால் நீழலில் நல்லார் நால்வருக்
35 கரும்பொருள் உரைத்த பெரும்பொருள் [போற்றி
விற்றிறல் விஜயற் கற்றைநாள் பாசு
36 பதங்கொடுத் தாண்ட சிதம்பர போற்றி

ஒருபூக் குறைந்ததென் றொருகண் இடந்தங்
கருச்சனை புரிந்த அரிக்குச் சக்கரம்
தந்த பெருந்தகைத் தாணுவே போற்றி
வலம்புரம் அதனில் வலம்புரிச் சங்கம்
மாலவற் களித்த வரதனே போற்றி
வாஞ்சையாற் கேட்ட பாஞ்சசன் னியத்தைத்
தலைச்சங் காட்டில் தாமரைக் கண்ணன்
வழிபட அளித்த வள்ளலே போற்றி
வெள்ளங் காட்டி வெருட்டி உமையவள்
தழுவக் குழைந்த தயாபர போற்றி
நச்சர வாட்டிய நம்பா போற்றி
மறைவனத் தொருநாள் மணநெய் கவர்ந்த
எலியைமா வலியா யிருத்தினை போற்றி
இதஞ்சலிப் பெய்தாப் பதஞ்சலி ஏத்த
நிதம்புரி நடன நீதனே போற்றி

புலிக்கா லண்ணல் போற்றத் திருநடம்
சலிக்கா மற்புரி சதாசிவ போற்றி
பாடுவார் இருவரைத் தோடதார் செவியிற்
பீடுடன் கொண்ட பிரானே போற்றி

6. திருவிளையாடல் 64 :

இந்திரன் பழியொழி இறைவ போற்றி
ஐரா வதத்துக் கருளினை போற்றி
மதுரை நகரை வகுத்தனை போற்றி
தடாதகை வரஅருள் தந்தனை போற்றி
அரசியை மணந்த அரசே போற்றி
*வெள்ளியம் பலத்தில் துள்ளினை போற்றி
குறளனுக கரும்பசி கொடுத்தனை போற்றி
அன்னக் குழியவற் களித்தவன் தாகம்
தீர்த்த வைகையால் தீர்த்தனை போற்றி (8)

---

* 'வெள்ளியம் பலத்துட் டுள்ளிய பெருமான்'—கல்லாடம் 34

எழுகடல் அழைத்த இறைவ போற்றி
௮ மாமி மகிழ மாமனை அழைத்த
சாமி போற்றி சதாசிவ போற்றி
உக்கிர குமரனை உதவினை போற்றி
வேல்வளை செண்டவை விருப்புடன் அளித்துக்
குமரற் காத்த குழக போற்றி
கடலது சுவறக் காத்தனை போற்றி
இந்திரன் முடிவளை எற்ற இயற்றின
சுந்தரச் சோதிநின் துணைப்பதம் போற்றி
செண்டடி பெற்றுத் திருவார் மேரு
மண்டுபொன் தரும்படி வைத்தனை போற்றி
மறைப்பொருள் விளக்கின வானவ போற்றி (16)
64 மாமணி விற்ற தூமணி போற்றி
வருணன் நாண வாரிதி வற்றக்

65 காருத வுந்தனிக் கடவுள் போற்றி
நாடழி யாதுகார் நான்கும் மாடக்
கூடல் வகுக்கக் குறித்தனை போற்றி
எல்லாம் வல்ல சித்த ரெனவே
உல்லாச மாக உலவினை போற்றி
கல்லானை தின்னக் கரும்பளித் தன்று
வல்லான் எனவே வயங்கினை போற்றி
யானை எய்தகோ மானே போற்றி
விருத்த குமார பால னெனவிழை
ஆடல் புரிந்த அரசே போற்றி
மாறி யாடின மணியே போற்றி (24)
பழியஞ்சி நின்ற பரசிவ போற்றி
மாபா விக்கருள் பூபா போற்றி
6 அங்கம் வெட்டின தங்க போற்றி
75 நாகம் எய்த நாயக போற்றி

மாயப் பசுவை மாய்த்தனை போற்றி
மெய்க்காட் டிட்ட மெய்ய போற்றி
உலவாக் கிழிதரும் உலப்பிலி போற்றி
வளையல் விற்ற மணாளா போற்றி (32)
அட்ட சித்திகள் அளித்தனை போற்றி
விடையின் பொறிபொறி சடைய போற்றி
தண்ணீர்ப் பந்தல் சமைத்தனை போற்றி
ரசவா தஞ்செய் ரஞ்சித போற்றி
சோழன் மடுவிழச் சூழ்ந்தனை போற்றி
உலவாக் கோட்டை உதவினை போற்றி
மாமனா வந்து வழக்கது வென்ற
தாமனா உன்றன் துணையடி போற்றி
வரகுணன் மகிழ மாசிவ லோகக்
காட்சியை யளித்த கடவுள் போற்றி (40)
விறகினை விற்ற விரக போற்றி

திருமுகங் கொடுத்த திருவ போற்றி
பலகை யிட்ட பரம போற்றி
இசைவாது வென்ற இன்ப போற்றி
பன்றிக் குட்டிகள் பருகப் பாலினைத்
தாயா யளித்த தயாபர போற்றி
ஏனமுந் நான்கும் இறையமைச் சாக
மீனவற் களித்த வானவ போற்றி
கரிக்குரு விக்குக் கருணை காட்டிய
கண்ணியங் கொண்ட புண்ணிய போற்றி
நாரைக்கு வீடு நல்கினை போற்றி (48)
ஆலவா யெல்லை அமைத்தனை போற்றி
சுந்தரப் பேரம் பெய்த சோம
சுந்தர நீல கந்தர போற்றி
சங்கப் பலகை தந்தனை போற்றி
தருமி மணஞ்செய அருமைய பொற்கிழி

அளிக்குங் கவியொன் றருளினை போற்றி
கீர னைக்கரை யேற்றிய கீர்த்தி
அறவனே ஆரா அமுதனே போற்றி
இலக்கணம் கீரற் ககத்தியர் மூலம்
நலக்க அளித்த நாயக போற்றி
சங்கப் புலவர் தம் சங்கையை ஊமன்
தீர்க்க வைத்த திருவருள் போற்றி
இடைக்கா டன்கொள் பிணக்குட னேக
அவன்பின் சென்ற சிவனே போற்றி (56)
பரதர்கோன் மகள்மணம் பண்ணுதற்கன்று
வலைவீ சியதிறம் வாய்ந்தவ போற்றி
வாதவூ ரர்க்குப் போதக போற்றி
நரிபரி யாக்கிய நாடக போற்றி
பரிநரி யாக்கிய பக்குவ போற்றி
பிட்டமு துக்கடி பட்டவ போற்றி

மீனவன் சுரந்தவிர் ஞானனே போற்றி
சமண்கழு வேற்றிய சதுர போற்றி
வன்னியுங் கிணறும் லிங்கமும் வந்து
சான்று பகரச் சமைத்தனை போற்றி (64)

7. பிற ஆடல்கள் :

கவிஞராய்ப் போந்த காரியார் நாரியார்
தடைபட வழிமறித் திடையனாய் நின்றவர்
பாப்பகுந் திட்ட பரமனே போற்றி
நலிவுறு புல்வாய் நனிமகிழ் வெய்தப்
புலிமுலை யளித்த புண்ணிய போற்றி
சாயா அன்பொடு தாயாய் வந்து
மருத்துவம் பார்த்த கருத்தனே போற்றி
ஐயா றதனிற் சைவா போற்றி
வழித்துணை நின்ற வள்ளால் போற்றி
தாடகைக் காத்தலை சாய்த்தனை போற்றி

8. அறுபத்து மூவரை ஆண்டது:

திருநீல கண்டர்க் கொருநீதி காட்டிய
கருநீல கண்டநின் கழலிணை போற்றி
இல்லையென் றுத இயற்பகை இல்லை
ஈயெனக் கேட்ட நாயக போற்றி
மின்னிடி மழையிற்செங்நெல் கொணர்ந்துண
வளித்த மாறற் கருளினை போற்றி
பொய்வே டத்தில் மெய்யது கண்ட
மெய்ப்பொருட் குற்ற மெய்ப்பொருள் போற்றி
தொண்டத்தொகைசொலக் கண்டவிறல்சேர்
மிண்டர்க் கருளிருட் கண்டனே போற்றி
கோவணம் மறைத்தமர்நீதியைச் குழப்பிய
பூவண நாத புராதன போற்றி
அடியரைக் காப்ப ததுகட னெனக்கொள்

அவ்வெறி பத்தர்க் கருந்துணை போற்றி (7)
நீற்றின் பெருமை நினைந்துயி ரிழந்த
ஏனாதி நாதர்க் கிறைவ போற்றி
கண்ணிடந் தப்பின கண்ணப் பர்க்கருள்
புண்ணிய முதல்வ புராண போற்றி
கலயற் கருள்புரி தலைவ போற்றி
மானக்கஞ் சாறர் பானற்கண் மகளின்
கூந்தலை விழைந்த ஏந்தலே போற்றி
தாயனார்க் கருள்புரி தூயனே போற்றி
ஆனாயர் குழலிசைக் கருளிணை போற்றி
சந்தனத் தொண்டுசெய் சிந்தனை மிக்க
மூர்த்திக் கருள்புரி தீர்த்தனே போற்றி (14)
மாலை புனைந்து மகிழ்ந்து பணிந்த
முருகனுக் குகந்த மூர்த்தி போற்றி
உருத்திர பசுபதி உறுஜெபத் திறங்கண்

டருத்தியோ டவர்க்கருள் ஒருத்தனே
நாளைப் போவார் நற்றிறங் கண்டு [போற்றி
தில்லைக் களைத்த சிட்டனே போற்றி
தொண்டர் குறிப்பறி தொண்டரை யாண்ட
தொண்டர் நாதநின் துணையடி போற்றி
தாதைதாள் அறஎறி சண்டீசு சர்க்கருள் டீ
நீதிசேர் நிமலநின் நிரைகழல் போற்றி
ஒப்பிலா அப்பர்க் குறுதுணை போற்றி
குலச்சிறை தவமகிழ் குழகனே போற்றி (21)
சுந்தரர் நாமம் தூமனத் துற்ற
மிழலைக் குறும்பர் விழைமுதல் போற்றி
மாம்பழங் கொண்ட மாதவச் செல்வி
பேயுரு அம்மையைப் பேணினை போற்றி
நாவுக் கரசின் நாமம் போற்றின
அப்பூ திக்கருள் அப்பனே போற்றி

நலந்திகழ் நீல நக்கர்க் கன்று
சிலந்தியைப்போக்கின சீர்மையை விளக்கின
*நலந்தி நிறத்து நாதனே போற்றி
எரியகல் நீர்கொண் டேற்றின மாத்திறல்
நமிநந் திக்கருள் நற்றவ போற்றி
எங்குலத் தெய்வம் எம்பிரான் பந்தன்
இசைத்தமிழ் நாடிய இறைவனே போற்றி
ஏயர்கோன் உற்ற இரும்பிணி நீக்க
நம்பியை அனுப்பிய நம்பனே போற்றி (28)
திருமந் திரநூல் செப்பிய மூலரின்
முன்னுடல் மறைத்த மூலனே போற்றி
கண்ணிலாத் தண்டி கண்பெற அருளிய
புண்ணிய பூத புராணனே போற்றி
சூதாட் டப்பொருள் தொல்லடி யார்க்கே

* நல்அந்தி நிறம்

ஊக்கத் துடனளி மூர்க்கற் கருள்புரி
பரம யோகியெம் பரஞ்சுடர் போற்றி
ஆரூரர் நண்பர் சோமாசி அன்பர்க்
காடல் காட்டிய ஏடக போற்றி
சாக்கியர்க் கருள்புரி தீக்கர போற்றி
சிறப்புலிக் கருளின சிறப்பினை போற்றி
சிறுத்தொண்டர்க்கருள் செயவிழைந் தன்று
பிள்ளைக்கறி பேணின பெரும போற்றி (35
சேரமான் பூசைச் சிறப்பினை மகிழ்ந்து
வாரமாச் சிலம்பொலி வழங்கினை போற்றி
காழி வேந்தன் கழலிணை போற்றிய
கணநா தர்க்கருள் கண்மணி போற்றி
மாற்றலர் அஞ்சும் கூற்றுவர்க் கன்று
திருவடி சூட்டி ஆட்சி செய அருள்
பொங்கழல் உருவநின் பூங்கழல் போற்றி

சடையின் பெருமை தன்னகங் கொண்ட
புகழ்ச்சோ ழற்கருள் புனித போற்றி
தூர்த்தனி றணிந்திடில் தீர்த்தனே என்று
பார்க்கும்ஞா னத்துடன் பணிநர சிங்க
முனையர்க் கருள்புரி முன்னவபோற்றி
நவரத்ன மீனும் நாதற் கெனும்அதி
பத்தர்க் கருள்புரி வித்தக போற்றி
இவ்வடி யான்முனம் ஏவலா ளன்னெனும்
நினைவுகூ டாதென மனைவிகைத் தடிந்த
கலிக்கம் பற்கருள் கண்ணுதல் போற்றி (42)
எண்ணெ யிலாமையால் என்கழுத் தையரிந்
திரத்தம் பெய்திங் கேற்றுவன் தீபம்
எனத்துணிந் தெழுந்த கலியற் கிரங்கும்
எந்தை யீசன் எம்பிரான் போற்றி
சிவனடி யவரைச் செற்றிகழ் வோர்தம்

நாவை யறுக்கும் நற்றிறச் சத்தி
அடிகளுக் கருளும் ஆத்தனே போற்றி
சிவஸ்தலங் களுக்குச் சீரார் பெருமைப்
பண்பார் வெண்பாப் பாடிய காடவர்
கோனுக் கருள்புரி கோமான் போற்றி
முடியைத் தீபமா முன்னவற் கெரித்த
கணம்புல் லர்க்கருள் கர்த்தனே போற்றி
பாடிய பரிசிலைப் பரன்பணிக் காக்கும்
காரிக் கருள்புரி கண்ணுதல் போற்றி
காழிப் பெருமான் கருணை யதனுல்
திருநீ றணிந்த சீர்நெடு மாறன்
உய்ப அருளிய உத்தம போற்றி
கோயிலா மனத்தைக் குறிநிய மத்தர்
வாயிலார்க் கருளும் வள்ளலே போற்றி (49)
போர்முனை வென்ற பொருளடி யார்க்கங்

ஈந்து மகிழ்ந்த இதயத் திறங்கொள்
முனையடு வார்க்கருள் முதல்வ போற்றி
பூசைக் குரிய பூஎடுத் தாளெனக்
காதலி கரந்தெறி கழற்சிங் கற்கருள்
பூத புராணநின் பொற் கழல் போற்றி
சிவனடி யார்க்கெனச் செல்வ மனைத்தும்
கொள்ளை கொளவிடு குணப்பெருஞ் செல்வர்
இடங்கழி யார்க்கருள் விடங்க போற்றி
பூசைக் குரிய பூவைமோந் தாளெனக்
காரிகை துண்டந் துண்டங் கண்ட
செருத்துணைக் கருள்புரி செல்வா போற்றி
பூசைசெய் புகழ்த்துணைக் குறுபசி போக்கக்
காசது நல்கிய கடவுள் போற்றி
அடியவர்க் குரியநெல் லதையெடுத் தாரென
எடுத்தவர் தம்மை வாள்கொண் டெறிந்த

கோட்புலிக் கருள்புரி குணமணி போற்றி
மனக்கணே கோயில் வகுத்த பெருமான்
**பூசலார்க்** கருள்புரி புண்ணிய போற்றி (56)
சிவநெறி போற்றிய தெய்வப் பாவை
**மங்கையர்க் கரசி** மகிழ்தர உதவிய
கற்பகக் கனியெங் கண்ணுதல் போற்றி
சாலியர் **நேசர்** தம்பணி யுகந்த
மேலவர் மேலவ மெய்ப்பொருள் போற்றி
சிலம்பியாப் பந்தர் சிவபிராற் கமைத்த
**கோச்செங் கணாற்**கருள் கொற்றவ போற்றி
காழியர் பாடலை யாழினி லிட்ட
பாணற் கருள்புரி தாணுவே போற்றி
நம்பியா ரூரரை நலம்பெறப் பெற்ற
**சடையற்** கருள்புரி சடையாய் போற்றி
நம்பியா ரூரரின் நற்றாய் எனவரும்

இசைஞா னிக்கருள் ஈசனே போற்றி
தொண்டத் தொகைதரு தொண்டர்க் கதிபன்
சுந்தரன் தோழநின் சுடர்த்தாள் போற்றி (63)

9. தொகையடியார்கள்: (9)

தில்லை யந்தணர் நல்லகத் திலங்கும்
கூத்தமர் பெருமநின் குரைகழல் போற்றி
பொய்யடி மையிலாப் புலவர்க் கருள்புரி
மெய்யனே போற்றி விமலனே போற்றி
பத்தராய்ப் பணிவார் சித்தத் துறையும்
அத்தனே போற்றி அருத்தனேபோற்றி
பரமனைப் பாடும் பண்பினர்க் கருளும்
கத்தனே போற்றி கருத்தனே போற்றி
சித்தம் சிவன்பாற் சேர்த்தவர்க் கருள்புரி
சித்தனே போற்றி திருத்தனே போற்றி
ஆரூராப் பிறந்தார் அவர்பிற வா அருள்

பாலித் தருளும் பரனே போற்றி
திருமேனி தீண்டும் பெரும்பேறு பெற்ருேர்க்
கருள்புரி குருபர அரஹர போற்றி
முழுநீறு பூசும் முநிவர்க் கருள்புரி
விழுமிய கொள்கை விழுப்பொருள் போற்றி
அப்பா லும்மடிச் சாரும் அடியார்க்
கருள்புரி கருணைய அரஹர போற்றி (9)

10. பிற அடியார்கள் :

மணிவா சகரருள் மணிவா சகங்களை
எழுதி மகிழ்ந்த எழிலே போற்றி
இசைப்பா பாடிய இசைப்புல வர்க்கருள்
திசைப்பார் போற்றும் தீர்த்தனே போற்றி
வகைப்படத் தொண்டத் தொகைவிரி நம்பி
யாண்டார் நம்பியை யாண்டவ போற்றி
மறுவற்ற பத்தி அறுபத்து மூவர்

அவர்சரி தஞ்சொலும் ஆரரு ளாளர்
சேக்கிழார்க் கருள்புரி தேவே போற்றி
பட்டினத்தார் தொழு பட்டனே போற்றி
சாத்திரஞ் சொன்ன சந்தான குரவர்க்
கொருகுரு எனத்திகழ் ஒருத்தனே போற்றி
தாயுமா னவர்க்கருள் தந்தையே போற்றி
குமர னருள்பெறு குமர குருபரர்,
சிவப்பிர காசர், சிவஞான முனிவர்
ஆதிய அடியார்க் கருளினே போற்றி
கண்டிகை நீறணி கருத்தினர்க் கருளும்
அண்ட வாணநின் அடியிணை போற்றி
சிவாய நமஎனச் சிந்திப் பவர்க்கோர்
அபாயம் இலாவகை அருள்வாய் போற்றி
எட்பரி சேத்தினும் அப்பரி சேநின்
றருள்புரி பரசிவ அற்புத போற்றி

ஆணொடு பெண்வடி வாயினை போற்றி
மடப்பா வைக்கன் றிடப்பா கந்தரு
சடைப்பாற் பிறையணி சங்கர போற்றி
கயமுக னைத்தெறு கரிமுக னைத்தரு
வயவ போற்றி வரத போற்றி
மாயச் சூரை வீய வைத்த
அத்தனைத் தந்த தத்துவ போற்றி
இடபம தேறும் எந்தாய் போற்றி
சேவார் வெல்கொடித் தேவே போற்றி
கட்டங் கக்கொடி காட்டினை போற்றி
சூலக் கரத்துச் சுந்தர போற்றி
மாண்டா ரெலும்பணி மன்னவ போற்றி
புரிநூல் மார்பிற் பூண்டனை போற்றி
தீவண மேனிப் பூவண போற்றி

மின்னிகர் சடைமுடி விண்ணவ போற்றி
மானுரி கரியுரி மகிழ்ந்தனை போற்றி
தேளணி செஞ்சடைத் தேசிக போற்றி
கண்டி பூணுங் கருத்த போற்றி
தூயவெண் ணீறு துதைந்தனை போற்றி
தலையணி மாலை தரித்தனை போற்றி
வானமருஞ்சடை வானவ போற்றி
கொன்றையுங் குரவுங் கோடலும் ஆத்தியும்
வன்னியும் தும்பையும் மத்தமும் எருக்கும்
கரந்தையும் பூளையும் கமலமும் கோங்கும்
வில்வமும் நொச்சியும் விரும்பினை போற்றி

12. இருபத்தைந்து வடிவு :

வரோதய மூர்த்தியாய் வயங்கினை போற்றி
சுகாசன மூர்த்தியாய்த் துலங்கினை போற்றி
சுப கலியாண சுந்தர போற்றி

உமாம கேசுர உத்தம போற்றி
கிரீச மூர்த்தியாம் கேடிலி போற்றி
சோமாஸ் கந்தராம் தூயவ போற்றி 365
சக்கர தான சதுரனே போற்றி
த்ரிமூர்த்தி யாமெந் தேவே போற்றி
ஹரிஹர மூர்த்தியே ஹரஹர போற்றி
தக்ஷிணா மூர்த்தியாம் தத்துவ போற்றி (10)
பிக்ஷா டனராம் பெரும போற்றி 370
கங்கா ளன்னெனும் கடவுள் போற்றி
காமசங் கார கண்ணுதல் போற்றி
காலசங் கார கழலாய் போற்றி
சலந்த ராசுர சங்கார போற்றி (15)
முப்பு ராரியாம் மூர்த்தி போற்றி 375
சரப மூர்த்தியாம் சங்கர போற்றி
நீல கண்டராம் நித்திய போற்றி

த்ரிபாத மூர்த்தியாம் தீர்த்த போற்றி
ஏக பாத இறைவ போற்றி (20)
வயிரவ மூர்த்தியாம் வானவ போற்றி 380
இடபா ரூடராம் எம்மான் போற்றி
சந்திர சேகர தற்பர போற்றி
நடன மூர்த்தியாம் நாத போற்றி
கங்கா தரராம் கற்பக போற்றி. (25)

13. பிற வடிவுகள் :

இலிங்க ரூபத் திலகினை போற்றி 385
பாதியோர் மாதர் மாலுமோர் பாகர்
எனத்திகழ் வனப்புறும் இனித்தனே போற்றி
ஓங்கா ரத்துள் நீங்காய் போற்றி

14. தலவாசம்

பஞ்சபூ தத்தலம் பதிகளாக் கொண்ட
மஞ்சனே போற்றி மருளனே போற்றி

ஆரூர் ஆனைக் காவுடன் அழகார்
அண்ணா மலைகா ளத்தி சிதம்பரம்
காசி ஆலவாய் ஏசிலா தார
யோகத் தலங்களிற் போகனே போற்றி
கஞ்ச னாதியர் கைதொழு தேத்தப்
பஞ்ச சபைகளிற் பண்பார் வகையில்
நட்ட மாடுஞ் சிட்டனே போற்றி
ஆரூர் ஆதிய ஏழு தலங்களில்
நடங் குலா வித்திகழ் விடங்கனே போற்றி
கயிலை மலைவாழ் கண்ணுதல் போற்றி
வடநாட் டிலகுறு வளமார் பதிகள்
ஐந்தினிற் றிகழும் மைந்தனே போற்றி
துளுவநா டதனில் துலங்குகோ கர்ணத்
திலங்கிடு நாதநின் பொலன் கழல் போற்றி
தொண்டை நாடதனிற் பண்டை நாள் முதலா

நலத்த எண்ணான்கு தலத்தனே போற்றி
இருபத்திரண்டெனும் இருப்பிடம் கொண்டு
நடுநாட் டிலகு நாயக போற்றி
கொங்கெழு பதிகளிற் புங்கவ போற்றி
மலைநாட் டொருபதி வாழ்வாய் போற்றி
இரண்டெழு பதிகள் இருப்பிடங் கொண்டு
பாண்டி நாட் டில்கும் ஆண்டவ போற்றி
ஈழத் திரண்டு வாழ்தற் கினிய
தலமெனக் கொண்ட தலைமைய போற்றி
காவிரி வடகரை காண்டகு தலங்கள்
ஏழொன் பதிலும் இலகினை போற்றி
காவிரித் தென்கரை கவினுறு தலங்கள்
இருபதும் நூறும் ஏழும் ஆனவை
இனிதாக் கொண்ட புனிதா போற்றி

15. வழிபட்டோர்

[1]விண்ணவர் [2]தானவர் [3]மண்ணவ ரானோர்
பண்ணிய பூசனை பரிந்தனை போற்றி
[4]அணிலும் [5]ஆமையும் [6]ஆனையும் [7]காகமும்
[8]பசுவும் [9]பாம்பும் [10]பன்றியுங் [11]குதிரையும்
[12]நண்டும் [13]வண்டும் [14]நாரையும் [15]கழுகும்
[16]குயிலும் [17]மயிலும் [18]முயலுங் [19]குருவியும்
[20]ஈயும் [21]எறும்பும் [22]குரங்கும் [23]கருடனும்
[24]சிலந்தியும் பூசைசெய் சிற்பர போற்றி

16. வேதமும் சிவனும்

சாமவே தப்ரிய சங்கர போற்றி
வேதம் பாடும் விகிர்தா போற்றி
வேதம் போற்றும் பாத போற்றி 430
வேத முடிதிகழ் நாத போற்றி
வேத பீடிகை மேலோய் போற்றி

வேத பாதுகை வேந்தே போற்றி
வேத வாரண மேலோய் போற்றி

---

(1) தேவர் பூசித்தது - திருக்காட்டுப்பள்ளி (கீழை), கோட்டூர் முதலிய (2) அசுரர் பூசித்தன இடும்பாவனம், திரிசிராப்பள்ளி முதலிய (3) மண்ணவர் அரசர் பூசித்தன திருவாரூர், திரு விடை மருதூர் முதலிய ! (4-24) அணில் முதல் சிலந்திவரை பூசித்த தலங்கள் முறையே (4) குரங்கணில் முட்டம் (5) திரு மணஞ்சேரி (6) திரு ஆனைக்கா, காளத்தி, கோட்டாறு, பெண்ணாகடம் (7) குரங்கணில் முட்டம் (8) திரு ஆமாத்தூர், ஆவூர், பெண்ணாகடம், ஆவடுதுறை (9) காளத்தி, பாம்புரம், நாகைக்காரோணம், திருநாகேச்சுரம், கும்பகோணம் நாகேசுர சாமிகோயில், பாதாளீச்சுரம் (10) சிவபுரம் (11) அயவந்தி-சாத்த மங்கை (12) திருந்து தேவன்குடி, திரு நீடூர் (13) திரு வெண்டுறை (14) திரு நாரையூர், மதுரை (15) திருக்கழுக் குன்றம். புள்ளிருக்கு வேளூர் (16) திருக்கோழம்பம் (17) மயிலாப்பூர், மயிலாடுதுறை (மாயூரம்) (18) திருப்பா திரிப்புலியூர், (19) மதுரை வலிவலம், (20) ஈங்கோய்மலை (21) திரு எறும்பியூர், (22) குரங்காடுதுறை - தென் வட ; குரக் குக்கா ; குரங்கணின் முட்டம், (23) சிறுகுடி (24) சீகாளத்தி, திரு ஆனைக்கா.

வேத நூபுர விண்ணவ போற்றி
வேதஞ் சரடா வேய்ந்தனை போற்றி
வேதக் கோவண வேதிய போற்றி
வேதமே விழியாய் விளங்குவை போற்றி
வேதமே மொழியா விளம்புவை போற்றி
வேதமே வடிவா விரும்பினை போற்றி
வேதச் செங்கோல் மெய்யனே போற்றி
வேத ஆணைய விதியனே போற்றி
வேதம் நான்கும் தேர்ப்பரி யாகவும்
வேதம் பந்தல் நாற்கால் ஆகவும்
போத அமைத்த பூதிய போற்றி

17. பரம் பொருள்

பதுமனாய் நின்று படைப்பாய் போற்றி
அரியாய் நின்றங் களிப்பாய் போற்றி

அரனாய் நின்றங் கழிப்பாய் போற்றி
மூவர்கோ எனத்திகழ் தேவர்கோ போற்றி
பந்தமும் வீடும் படைப்போன் போற்றி
பஞ்சபூ தங்களிற் பரந்தனை போற்றி
அட்ட மூர்த்தியாய் அமர்ந்தனை போற்றி
ஆக்கல், அளித்தல், அழித்தல், மறைத்தல்
அனுக்கிர கித்தலென் றைவகைச் செயல்புரி
ஆற்ற லமைந்த அதிபனே போற்றி
பிறப்பிறப் பில்லாப் பெரியவ போற்றி
"பிழைப்பு வாய்ப்பொன் றறியா நாயேன்
குழைத்த சொன் மாலை கொண்டருள் போற்றி
போற்றி போற்றி புராண காரண
போற்றி போற்றி சயசய போற்றி".

திருச்சிற்றம்பலம்

* திருவாசகம்-போற்றித் திருவகவல்.

## நூல் வரலாறும் வாழ்த்தும்

போற்றி அகவல் புகலென் றெனக்கோர்பணி
சாற்றிய தம்பிபல சந்தஞ்சொல்—ஆற்றல் நிறை
ஆறு முகனெந்தை ஆறு முகனருளால்
வீறுடனே வாழ்கபுவி மேல்.

வாழ்க இந் நூலை வழங்க உதவினவர்
வாழ்கமயில் வேல்சேவல் மாதிருவர்—வாழ்கவே
செல்லாருந் தென்தணிகைச் சேயோன் அடியார்கள்
எல்லாரும் வாழ்க இனிது.

———

Jyothi Printers, Madras-1.